உ

ஸ்ரீராமஜயம்.

தில்லைவளாகம்

# ஸ்ரீ. வீரகோதண்டராமஸ்வாமி

# உலா.



இது

கும்பகோணம் டவுன்ஹைஸ்கூல்

முதல் தமிழ்ப்பண்டிதராகிய

பின்னத்தூர்

**அ. நாராயணசாமி ஐயர்**

இயற்றியது.



கும்பகோணம்

ஜி. வெ. பத்துருசாமி செட்டியார்

அவர்களது

" லார்ட் ரிப்பன் யந்திரசாலையில் "

பதிப்பிக்கப்பட்டது.

**1902.**





விலை அணா-4.

ஸ்ரீராமஜயம்.

# * இராமஜாதகம்.

ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் ... கஎஅரு.
கல்யப்தம் ... ... ... ... ... ... ... ... சகூசாக.
இங்கிலீஷ் ... ... ... ... ... ... ... ... 1862.

இவற்றின்மேற் செல்லாநின்ற துந்துபி-ஷு கார்த்திகைமீ கஉ-உக்கு இங்கிலீஷ்-ஷு 1862-ஷு நவம்பர்மீ 26உ புதன்கிழமை பூர்வபக்ஷ பஞ்சமி-கஎஉ, உத்திராடம்-அஉ, பாலவம் கஎஉ, திவி-கஅவ, அகஸ் உஅ, உதயாதி ( ரு )-நாழிகை அளவில் தனுர்லெக்கினத்தில் எழுந்தருளியது: உத்திராடம் பரமநாழிகை ருகூவ, தற்காலக் கிரகநிலைகளாவன:—

அநுஷம், கூ-ல் ... ... சூரியன். சித்திரை, உல் ... ... குரு.
உத்திராடம், ச-ல் ...சந்திரன். அநுஷம், கூ-ல் ... சுக்கிரன்.
உத்திரட்டாதி, ச-ல்... குஜன். அஸ்தம், க-ல் ... ... சனி.
விசாகம். உ-ல் ... ... புதன். கேட்டை, கூ-ல்... ...இராகு.
மிருகசீர்ஷம், க-ல் ... ... ...கேது.

---

* இராமஜாதகமென்பது ஸ்ரீராமமூர்த்தி பூமியிலிருந்து எழுந்தருளியகாலத்தை ஒருஜாதகமாகக் கணிக்கப்பட்டது.

| | | | |
|---|---|---|---|
| குஜ | | கேது | |
| | இராசிச்சக்கரம். | | |
| சந்திரன் | | | |
| இலக் | சுக்கிரன் இராகு சூரியன் | புதன் | குரு சனி |

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | சனி | புதன் | இலக் |
| இராகு | அம்சசக்கரம். | | |
| | | | கேது |
| | குஜ | சூரியன் சுக்கிரன் | குரு |

சுபமஸ்து.

---

☞ ஜ்யோதிஷம் வல்லோர் இதனைச் செவ்விதின் விரிவாகக் கணிதம் செய்து பயன்கண்டுகொள்வார்களாக.

# உலாவிலடங்கிய விஷயங்கள்.

## உலாவிலடங்கிய விஷயங்கள்.

### மடந்தை.



### அரிவை.



### தெரிவை.



### பேரிளம்பெண்.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | கண்ணிகளின் எண். | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪ | ௧௨ | சோமகன் | சோமுகன். |
| * ௧௧ | ௮௧ | சபரி | சவரி. |
| * ௬௫ | ௬௧௦ | யர்நின் றூற் | யர்க ளாற். |
| * ௭௪ | ௭௦௨ | கடகமென் | கவினென். |
| * ௮௦ | ௭௫௯ | யாஞ்சொ | யஞ்சொ. |

* இக்குறியிடப்பட்டன சில பிரதிகளில் மட்டுமே காணப்படுவன.

உ

ஸ்ரீராமஜயம்.

## தில்லைவளாகம்

# ஸ்ரீவீரகோதண்டராமஸ்வாமி

# உலா.



காப்பு.

### விநாயகர்.

பூமல்கு தென்றில்லைப் புண்ணியன்சீ ராமனுலாப்
பாமல்க வோர்துணையாப் பற்றுவா—மாமல்கு
மைந்துசெறி சேயோன்மான் மங்கைதனை மீட்டணைய
வந்துதவி ஞேன்றுண் மலர்.

### ஆஞ்சநேயர்.

ஐந்திரஞ்சேர் மாகடலு மாரியன்றூ தாய்க்கடலும்
வந்திலங்கை யொன்னார் மலிகடலு—மூந்தெவரும்
வீட்டாப் பவக்கடலு மெல்லக் கடந்தநம்பி
தாட்டா மரைநமக்கோர் சார்பு.

### நம்மாழ்வார்.

வேதந் தமிழில் விளங்கச் செழுங்குருகூர்ப்
போதந் தமிழ்திற் புகன்றருள்செய்—நாத
னொருமாறன் பாதங்க ளுள்ளுதுஞ்சொன் மாலை
வருமாறன் பாக மகிழ்ந்து.

### ஆசிரியர்.

கூருதி யொருங்குபண்டே தோற்றுவித்தீண் டின்பந்
தருதமிழன் பாலெனக்குந் தந்த—திருமறையோன்
மாமுத்து ராமனெனும் வள்ளல்பதம் போற்றியிந்நூல்
காமுற் றுரைப்பன் களித்து.

### அவையடக்கம்.

தூருக்கொ ணறும்பூங் குவாலிறும்பு தம்மு
னெருக்க முகிழ்த்தென் றிகழா—திருத்தில்லை
நம்பியுலா வென்பனுவ லுடி நறுந்தமிழோர்
வெம்பியுரை யாடார் வெகுண்டு.



நூல்.

பூமேவு நான்முகற்கும் பொன்மேவு நாட்டத்துக்
காமேவு கற்பகம்வாழ் காவலற்கு—மாமேவு (௧)

மும்பருக்கும் விண்மே லுறையும் பிறருக்கு
மம்புவியில் யாவருக்கு மாதியா—யம்புவியி (௨)

லெவ்வினைக்குங் காவலா யெவ்வினையுஞ் செய்வித்திட்
டவ்வினைக ளெல்லாந்தா னாகியே—யெவ்வுயிர்க்குங் (௩)

காவலா யெங்குங் கரும்பி லிரதமெனப்
பாவகனிற் சூடென் பதுவென்ன—மேவியகா (௪)

ரொள்ளினெய் யென்ன விலங்குபொன்னிற் சோதியென்ன
வுள்ளுளே தோன்றி யொளிருவோ—னுள்ளவர்கட் (௫)

சாதியாய் நின்றதன்றி யப்பாலு மெப்பாலுஞ்
சோதியாய் நின்ற சுடர்க்கொழுந்து—சோதியாய் (௬)

பூதமோ ரைந்தின் புணர்ப்பாய்க் கலந்தோன்பல்
வேதமே தானாய் விளங்குவோன்—போதமெய் (௭)

நச்சுத னாம நவின்றார்க் கருள்புரியு
மச்சுத நாமன்கை யாழியா—னச்சரவப் (௮)

பாயலான் பாயும் பறவைக் கிறையூர்ந்தோன்
சாயலான் மேகந் தனைவென்றோன்—றாயதுழாய் (௯)

மாலையா னெல்லோர்க்கு மாலளிப்போன் பள்ளிநெடு
வேலையா னஞ்சா ரிடற்றோனு—நூலின் (௧0)

மருங்கமைத்த நாவின் மலரோனுந் தானுய்த்
திருந்து தொழிலொருங்கு செய்வோன்—பொருந்து (௧௧)

மறையனைத்துந் தான்வாரி வாரி யொளித்த
கறைமனத்துச் சோமகனைக் காய்வா—னறைகடலின் (௧௨)

மீனமாய்ச் சென்றந்த வெய்யோனைக் கொன்றனந்த
மானமா வேதமருள் வண்மையா—னூனமற (௧௩)

வானோர் கடல்கடைநாள் வன்றாண்கால் சாய்தல்கண்டு
தானோர் கமடமதாய்த் தாங்கினோ—னூனத (௧௪)

வென்றியார் பொற்கட்பேர் வெய்யோ னுயிரினைவெண்
பன்றியாய்ச் சென்று பருகினோன்—வன்றிறல்சேர் (௧௫)

வெங்கணார் பொன்னனைமுன் மென்றானைப் போழ்ந்துநர
சிங்கமாய் வந்து தெழித்தொறுத்தோ—னங்கணிலன் (௧௬)

விஞ்சுபுகழ் மாவலிபால் வேண்டியடைந் திப்புவியைச்
செஞ்சரணொன் றாலளந்த சேயொளியோன்—றஞ்சப் (௧௭)

புறவே பொருட்டாகப் போந்து துலைபுக்
கறமே படைத்த வரசுந்—திறன்மேவு (௧௮)

மும்பர்பிரான் வெள்விடையா வூர்ந்துபகை செற்றவற்குப்
பைம்பொ னகரளித்த பார்த்திபனு—மம்புவியில் (௧௯)

---

(௧௮) அரசு—சிபிச்சக்கரவர்த்தி. (௧௯) பார்த்திபன்—புரஞ்சயன்; இவனே இந்திரவாகனெனப்படுவான்.

வந்துமா ரிக்குநிகர் வண்மைகொண்டு காத்திட்ட
துந்துமா ரப்பெயர்கொ ண்டோனும்—மிந்துநுதன் (௨0)

மாதர் வயிற்றின் வருமோர் மகவைத்த
னைதகட்டிற் றந்த வுரவோனும்—பேதமிலா (௨௧)

தீரானுண் டெல்லை யெரியரசு தானுண்ண
வாராநெய் யூட்டு மடலோனும்—மோராத (௨௨)

வாசிரியன் சாபத் தலைப்புண்டுஞ் சேனுலவு
மாசி னுடபெதஞ்சேர் மன்னவனுங்—கோசிகன்றான் (௨௩)

செய்யாக் கொடும்பாடு செய்துநதன் கட்டுரைகள்
பொய்யா விழுச்சீர்ப் புரவலனும்—பொய்யாத (௨௪)

தாதை புனற்கிறையின் சாபத்தாற் பட்டவெலா
மாதவத்தாற் றீர்த்த வலியோனும்—மோதம்வளை (௨௫)

ஞால மகிழ்ந்து நரலைகண்ட மைந்தர்தமைச்
சால வளித்த தராபதியுங்—கோலநெடு (௨௬)

மாலுந்தி வந்தோன் வரவிடுத்த கங்கைதனை
ஞாலந் தனிலழைத்த நாயகனும்—மாலோன் (௨௭)

வழிவந்த வேனளனை வன்கலிதான் சூழ்ந்து
விழிவெந்து வேறு வெருட்ட—வழிதந்து (௨௮)

---

(௨௧) உரவோன்=யுவனாச்சுவன். (௨௨) அடலோன்=அமபரீஷன்.
(௨௫) வல்லியோன்=உரோகிதன். (௨௬) தராபதி=சகரன்.

தன்பா லடையத் தனிக்கலியை நீக்கும்விஞ்சை
யன்பா லளித்த வடலோனு—நன்பாரில் (௨௯)

வந்தினிய மாதை மருவவெதிர் சாபத்தா
னந்தினியைக் காதத நராதிபனு—முந்தினையோர் (௩0)

தோன்றிப் புகழ்கொண்ட தூய கதிரிரவி
யான்ற குலத்தி லவதரித்தோ—னான்றிவரு (௩௧)

மென்றுமறைத் தானத்தா னேற்றத்தன் பாலினு
னென்றுமறைத் தானத்தா னேற்றத்தன்—றன்றிருப்பூம் ()

பாதம் படக்கல்லைப் பண்டுருச்செய் திட்டான்றப்
பாதம் படக்கல்லைப் பண்பினுன்—றுதைசொலத் (௩௩)

தண்டா ரணியந் தமிவருவான் றண்டுளவத்
தண்டா ரணியந் தமிவருவான்—றண்டாத (௩௪)

வையம்பன் மாசடையான் வற்கலையான் மற்றவர்போல
வையம்பன் மாசடையா வற்கலையான்—மெய்யெழுங்கும் ()

காலே தருமற் கடப்பரியா ருன்னவருள்
காலே தருமற் கடப்பரியான்—சாலவன்பின் (௩௬)

வந்துவந்து தந்தமத மாவலன்றும் வானடிக்கீழ்
வந்துவந்து தந்த மதலையான்—சிநதரவி (௩௭)

---

(௨௯) அடலோன்=இருதுபன்னன.

(௩0) நராதிபன்=திலீபன். இவர்களின் சரித்திரவிரிவை ஸ்ரீமத் பாகவதம், இரகுவம்சம் முதலியநூல்களிற் காண்க.

னஞ்சுக் கிரிவனல ஞகியும்பர்க் காத்தபிரா
னஞ்சுக் கிரிவ னலனுறன்—விஞ்சுங் (௩அ)

கவந்தவி ராதகரத் தானேகடிந் தானு
கவந்தவி ராத கரத்தான்—பவந்தவிர்ந்து (௩௯)

மாயமா ரீசன் வயங்கிளரக் கொண்டான்மா
மாயமா ரீசன் வயங்கொளியான்—ருய்மொழியாற் (௪0)

ருனமருங் கானந் தலைப்பெய்தா னந்தணர்க்குத்
தானமருங் கானந் தலைப்பெய்தா—னேனைத் (௪௧)

திரியம் பகவிலங்கை தீர்த்தா னிறுத்த
திரியம் பகவிலங்கைத் தீர்த்தன்—பரிவோடு (௪௨)

மச்சம்பா திக்குஞ் சிறையளிப்போ னுன்னர
கச்சம்பா திக்குஞ் சிறையழிப்போ—னிச்சயமா (௪௩)

வவ்வுகத்தி லுத்தரதிக் கீர்ந்தபடி தென்றிசையு
மிவ்வுகத்தி லேமகிழ வெண்ணியோ—வெவ்வமிலாக்(௪௪)

கங்கையினு மேலாகுங் காவேரி யென்பதனை
யெங்கும் விளக்கிவர வேய்ந்தேயோ—பங்கமிலாத் (௪௫)

தாயத்தார் நாடுந் தனதேயென் ருட்சிபெறு
நேயத்தா லெய்த நினைந்தேயோ—மேயக்காற் (௪௬)

கோசலத்தார் பேரின்பங் கொண்டதுபோற் சோணுட்டு
மாசனத்தார் கொள்ள மனம்வைத்தோ—வாசிலா (௪எ)

தோருங் குறிப்பிதுவென் றுற்றறியா வாறுநெடுங்
காரும் பொழிலுங் கலந்தோங்கிப்—பாரெங்கு (சஅ)

மெல்லை வளாகமிவை யென்றறியா வித்தாரத்
தில்லை வளாகச் செழுந்தலத்தி—னல்லபிள்ளைப் (சகூ)

பெற்றாள் குளத்தின் பெருங்கரைக்கீழ் பாம்புன்செய்
கற்றானத் தின்கீழ் நயந்தருளி—யுற்றே (ருய)

யொரு ச்சி வாயகுடி யோங்கவந்த சீர்த்தித்
திருவீர பத்திர தேவன்—றருபுதல்வர் (ருக)

மூவரி னன்பு முதிரு மொருவேலுத்
தேவ னயலார் சிலரோடு—மோவில் (ருஉ)

பசனைமடங் கட்டுமிடம் பார்த்துமுத ளைத்
திசையனைய தானத்தைச் சிந்தித்—திசைசகமா (ருங)

மோரா யிரத்தெழுநூற் றுற்றவெ பத்தைந்திற்
சீராய துந்துமிப்பேர் சேர்வருடத்—தாரிரவி (ருச)

தேளோரை சேர்கார்த் திகைமாதந் தெய்திநன்
ளோர் பனிரண்டி னண்ணுபுதக்—கோள்வாரம் (ருரு)

பஞ்சமி பூருவ பக்கமுத்தி ராடநா
ளெஞ்சியநா லாங்கா லிரவியுதித்—தஞ்சு (ருசா)

---

(ருச) இதுமுதலாகக் கூறியிருக்கும் கிரகங்களின் நிலைமை முதலியவற்றின் விரிவை இப்புத்தகத்தின் முதலிற் சேர்த்திருக்கிற இராமஜாதகத்திற்காண்க.

கடிகை யளவிற் கதிரனுட மூன்றிற்
படிமகனு ளீற்றயல்பிற் பாதத்—தடைய (ருஎ)

விசாகமயற் பாதத்தின் மேயபுதன் வைக
வுசாவுகுரு சித்திரைமுன் னூற்றூங்—கசாவின்றி (ருஅ)

நிற்பவெள்ளி யவ்வனுட னேர்மூன்றூங் கான்மந்தன்
பொற்பமரத் தம்முதற்காற் போந்திருப்ப—நற்கேட்டை ()

மூன்றி லிராகு முதலேந்தி னொன்றின்மற்றஃ
தேன்றுறையச் சாப விலக்கினத்து—ளான்றநிலன் (சுo)

செப்பமிட்டுக் காடு திருத்திமடங் கட்டுவிப்பா
னொப்ப முகூர்த்த முனூற்றுதலுங்—தப்பில் (சுக)

கொழுங்கருவி யிற்றட்டங் கோப்பவென்னே யென்று
விழைந்த வுளத்தோடு மேவி—யழுங்கலின்றிப் (சுஉ)

பக்கம் பறித்தெடுப்பப் பைந்தொடியாள் வைதேகி
தக்கதிருத் தம்பிகா றந்தமகன்—சக்கரமுற் (சுங)

றின்ன வுருவுதன்றோ டேய்ந்திருப்பக் கண்டுநெஞ்ச
நன்ன ருருகி நலந்தழீஇ—மன்னி (சுச)

யெடுத்தங் கொருதடத்தி லிட்டுச் சிலநா
ளடுத்துக் கழிந்திடலு மப்பா—லெடுத்தவிடத்

தோர்குடம்பை கட்டியத னூடுவைத்துப் பூசைமுறை
யார்வமுடன் செய்வித்திட் டன்றுமுதற்—பார்முழுதும் ()

வந்துதவு பல்பொருளால் வைகு மிடத்தினில்வா
னிந்துதவழ் கோயி லியற்றியே—சந்தமறை (சுஎ)

யாகமத்தின் பாங்கா யதிலே பிரதிட்டித்
தோகைமலி பூசை யுஞற்றுவிப்ப—மோகனஞ்செ (சுஅ)

யிஞ்சிப் புரிசை யெழின்மான மீதிலிருந்
தஞ்சிப் புகுந்தார்க் கவயமளித்—தெஞ்சலின்றிக் (சுகூ)

கோதையர்கள் சேயில்லைக் கோமானே யென்றுகுறை
யோதுபவர்க் கின்சே யுவந்தருளி—வாதனைசெய் (எ0)

நோயுடையார் கட்குற்ற நோயகற்றித் தொன்றுதொட்ட
பேயுடையார்க் கப்பீழை போக்கொழித்துச்—சேயபத()

முள்ளி வருபவர்கட் குள்ளி யதுகொடுத்து
வள்ளிய னாகி வயங்குவோன்—கள்ளக் (எஉ)

கதவன் கொடுங்கும்ப கன்னனிலை நீர்ந்து
சிதைய வதைத்திட்ட நீரன்—றதைபடைக (எ௩)

ளேந்துபல கையாற் கிகலான் பரத்துவனார்
வாய்ந்த விருந்தூண் மகிழ்ந்துடையான்—றாந்திசைசெ ()

யம்போதி கைக்கொண்டா னய்மோ சரமனைத்து
மெம்பா லிருப்ப வெனக்கொண்டு—வெம்போரார்ப் (எரு)

---

(எ௩) முதல் (கூ௩) வரையில் வீட்டுக்கருவிப்பெயரும், இடப்பெயரும், மிருகப்பெயரும், பறவைப்பெயரும், நீர்வாழ்வனவற்றின் பெயரும் ஒலித்தலைக் குறிப்பினாலுணர்க.

போக்கினுன் பொன்னுன பொய்ம்மானின் சாரோடித்
தாக்கினுன் முற்றத் தமியன்வலி—தேக்குசரக் (எசு)

கூடுவாய் சீர்முதுகன் கூடார்தொக் கூளைவிடுத்
தோடுமா றம்புசொரி யூற்றத்த—னீடுசேர்த் (எஎ)

தோள்வளையான் றண்டகத்தார் சூழ்ந்தலறத் தீர்ப்பலெண
வாள்வினையி னுத்தரஞ்சொ லாண்மையான்—ருள்விரும்பித்

தாழ்வா ரகத்திருப்போன் றையலாள் கூடத்தான்
சூழ்வே யடவிபுகுந் தொல்லையோன்—வாழ்வானோர்(எகூ)

மேனிலையா னுட்படியான் மேவா ரகத்தினிடைக்
கூன னெடுவாற் குரக்கினத்தைச்—சேனையெனக் (அ0)

கூட்டினுன் வில்லுண்டை கூனிகூன் மேற்பாய
மாட்டினுன் கன்று மனச்சவரிக்—கீட்டுவீ (அக)

டொட்டகத்தைத் தந்தா னுயர்தா மரையுந்திச்
சிட்டனரி தானுய்த் திகழொருவன்—பட்டவெழிற் (அஉ)

பன்றி யுருவன் பகரம் புலிவதனி
கன்று மனத்திற் கறையகற்றச்—சென்றுபைம்பொன் ()

மான்பிடிக்கத் தான்முயலு வன்மைகுரங் காவிறல
னுன்குதிரை யேறி நவியுநாட்—டான்கதிர்த்து (அச)

நிற்குஞ் சரக்கைய னீடு சினக்கனக
நற்குஞ் சரமஞ்சு நாரசிங்கன்—முற்ககனத் (அரு)

தாங்கமுதை யோவென் றரக்கி யலறவவ
ளோங்குறுப்புக் கொய்வித்த வுத்தமன்கள்—வீங்கியபூம் ()

பொங்க ரடிச்சிலையைப் பொற்பாவை யாக்கினன்
வெங்க ரடித்தானை வேந்தர்பிரான்—பொங்கி (அள)

யெறியு மயில வனிருங்கருட னேறி
யறியு மவருக் கருள்வோ—னெறிமையால் (அஅ)

வாழியகொக் கைப்பிளந்த வண்கோழி யான்மாமன்
கோழிலைய பூந்துளவன் கோட்டானைச்—சூழிடங்கர் (அகூ)

பற்ற வொழித்தானிப் பார்காக்கைக் கேற்றத்தான்
கற்றவஞ்சக் காக்கையினோர் கண்ணழித்தான்—முற்றுலகி

லெவ்வுயிரு மீனுமை யீன்ற முதலையன்
செவ்விய வாழித் திருக்கையன்—பௌவநிறை (கூக)

யம்பருந்து கும்பமுனிக் கன்றவய மீந்தபிரான்
வெம்பருந்து சூழவரு வெள்வேலான்—பைம்பொனிலங்()

காடையா னன்பர்க் கவுதாரி யான்பொங்கர்
மாடுசூழ் தில்லை வளாகமா—னீடுமண (கூங)

மீட்டுஞ் செழுந்தென்ற லேறிப் பரவியின்பங்
காட்டு மொருவசந்த காலத்தி—னுட்டமுற்ற (கூச)

சித்திரை மாதஞ் செழுமீன் புணர்பூச
முத்தம மான வுயர்நவமி—யத்திருநாட் (கூரு)

சாந்தி யிழைத்துத் தனிக்காப் பணிந்தன்பர்
பூந்துவ சாரோ கணம்புரிய—வாய்ந்தநீ (கூகூ)

ரார்கலியைப் போல வளவுபடா வாச்சியத்தி
ளோர்கலி யொல்லென் றுடன்பரக்கச்—சீர்கலிக்குந் (கூஎ)

துய்ய மறுகிடைநா டோறும்பல் லூர்தியினுஞ்
செய்ய விமானத்துஞ் சென்றுசென்—றெய்துழியோர் ()

வைகு லிரவின் மலரமளி மீதுதிரு
மெய்கலந்து மெல்ல விடிந்ததற்பின்—மொய்கவின்சேர் ()

மையுலவு சோலை மணிமண் டபநடுவிற்
றையலொடு சென்று தனத்திருந்து—செய்ய (க00)

திருவடிக்கே யன்பு செயுமறையோ ரீண்டிப்
பொருவில்சங் கற்பம் புகன்று—மருவியுயர் (க0க)

காவேரி சிந்துகங்கை காளிந்தி கன்னியொடு
பூவேரி சிந்து புனற்கபிலை—மாவாரி (க0உ)

நன்னதியி னீரிரொடு நல்ல துவர்பத்து
மன்னுவிரை யைந்தும் வயக்கியே—துன்னுநறை (க0ங)

யோமா விகைமுப்பத் தோரிரண்டுந் தோயவைத்து
மாமா லளிப்ப மலிநீரிற்—றேமோவு (க0ச)

கத்தூரி நற்புழுகு காமர்பனி நீரொடளாய்
வைத்தூ றியதைமேல் வார்த்திட்டுக்—கொத்தாரும்(க0ரு)

வேதியர்கள் வேதம் விளம்ப விளங்குமெய்யிற்
றூதிவரு மொற்றுடை சார்த்தக்கொண்—டாதரஞ்செய் ()

தாதை மொழியாற் சடையைப் புனையிடத்திற்
சோதிமணி மோலி சுடரவைத்துச்—சீதமதி (க0எ)

நெற்றிமேற் றமனாமே னீலமணி வண்டிருந்தாங்
குற்றதிலக மொளிர விட்டு—முற்ற (க0அ)

வயிரிலங்கைப் போரீற் றயன்றுதிக ளேற்ற
செவிமகர குண்டலங்கள் சேர்த்திக்—கவியின்பா (க0கூ)

லன்றுபி ராட்டிக் கடையாளங் தந்தவிரல்
சென்றுற வாழி செறித்திட்டுக்—கன்றமர்கை (கக0)

நம்பன் சிலையை நடுத்தறித்த கையிணைக்குச்
செம்பொன் மணிக்கடகஞ் சேர்த்தியே—யம்பொன்விற் ()

சேகுசெறி திண்டோட் டிருவழகுக் கேற்பப்பொன்
வாகு வலயம் வயக்கியே—யோகைதரு (ககஉ)

மூவர் வடிவு மொருவடிவாய் முன்வந்த
பாவனை காணும் படியதா—யோவலறு (ககங)

மேகத்தின் மீதாக மின்னல் புரள்வதுபோ
லாகத்திற் பூணு லதுசார்த்தி—மோகத்திற் (ககச)

பூத்தவிசின் மாதர் பொருந்திடமேற் பூவாமே
கோத்த மணியாரங் கொண்டணிந்து—காழ்த்த (ககரு)

மலையார நாவிவிரை மட்டித்த செச்சை
புலராத வாருகம் பூசித்—தலநீடு (ககசு)

நீலமலை மேற்கங்கை நீர்வீழ்ந்தாங் குத்தரிய
நால மலைத்தோ ணயந்தணிந்து—சீலநிறை (ககஎ)

வற்கலைதாய் தந்தவுடன் வாங்கித் தரித்தவிடம்
பொற்கலை யாரப் புனைந்தருளி—நற்கடல்சூழ் (ககஅ)

ஞாலமழி யாதூழி நாளில்வைத்துக் காத்தவிட
மேலுதர பந்தனத்தை வீக்கியே—சால (ககசு)

வுலம்புமுனி சாப மொழித்ததிருத் தாளிற்
சிலம்புங் கழலுஞ் செறித்து—நலங்கொண்ட (கஉ0)

விண்ணு டியரும் விரும்புதிரு மேனிநிலைக்
கண்ணாடி கொண்டு கடைக்கணித்தே—புண்ணுடி (கஉக)

யாறு சுவையி னமைத்ததிருப் போனகமு
மாறு படாத வகைக்கனியும்—கூறுபட்ட (கஉஉ)

வாம்பலசிற் றுண்டிகளு மார்ந்தருளித் தூநீராற்
பூம்பவள வாய்திருந்தப் பூசியே—மேம்படுநற் (கஉங)

றக்கோலங் காய்ச்சுண்டை சார்ந்த களிப்பாக்குத்
தொக்கோங்கு வாசச் சுருளோல—மிக்கோர் (கஉச)

விரும்பு மிலவங்க மேயகருப் பூரத்
தரும்பஞ்ச வாச மடக்கித்—திருந்தன்ப (கஉரு)

ரோழுடுக்குத் தீப மெதிரொவரும் கண்டுகளித்
தூமொழாடுக்கி நிற்ப வுவந்தெடுத்துத்—தாழ்வில் (கஉரு)

விதியாறு நீங்காமல் வேதம் புகன்று
பதினாறுபசாரம் பண்ணித்—துதியா (கஉஎ)

மிருதி வழிநிற்கும் வேதியர்க ளீண்டிச்
சுருதி யருச்சனைகள் சொல்லத்—திருவடிக்கே (கஉஅ)

செய்துகருப் பூரத் திருச்சுடர்நீ ராஞ்சனமுங்
கையதனி லேந்திமுனங் காட்டியபி—னுய்யெனவே ()

முன்னர்த் தமிழின் முதுமறையு மூதறிஞர்
பின்னர் மறைநான்கும் பேணிவந்து—பன்ன (கங0)

மிருதி மறையோர் வியன்சுருதி சொல்ல
வருதிறல்சேர் பாக வதர்தாம்—பெருகியநற் (கஙக)

சீர்த்திதனைக் கீர்த்திப்பத் திவ்வியநா மங்கள்சொல்லி
யார்த்த பெரியோ ரகமகிழ—வார்க்கொங்கைக் (கஙஉ)

கோட்டானை யாய குலமாத ரோடருளைக்
காட்டானை யொன்று களித்துவர—மாட்டுத் (கஙங)

துருவைமிசை யொன்றிரண்டு தோகையரோ டொன்றி
யிருவ ரொருபாங்க ரெய்த—வொருபான் (கஙச)

---

(கஉஅ) ஸ்மார்த்தப் பிராமணர்கள்.

மலைமான வேதா மனைமா னவனைக்
கலைமா னுடனே கலப்ப—நிலனேந்த (கரு)

பாயலாய் விண்செல் பரியா யிடந்தவறிற்
காயு மிருவர் கலந்துவர—மீயுயர்ந்து (கசு)

சீரியவெள் ளாம்பல் சிரஞ்சீவி ஞாளிமிசைக்
காரியொரு நால்வர் கதித்தெய்த—வார (கஎ)

விடாநெடிய சோதி விரிகதிருஞ் சேயுங்
கடாநெடுவை யங்கள் கலப்ப—வடாத (கஅ)

விபாவரிகாய் புட்பகத்தின் மேயவிமா னத்திற்
குபேரர்கள் கூடிக் குழுமத்—தவாதசீர் (கக)

மான நிருதிபேய் மல்கவய லோரிருவர்
மீனிடத்து மானிடத்து மேவிவர—வானியலுஞ் (கச0)

செவ்வாய்வண் டானை கருவாய் திருவோனவ்
வொவ்வாள்கேள் சுங்க னொருங்கெய்த—வெவ்வாயு (கசக)

மோங்கு திணையி லொருமைப்பா லீரெழுவர்
வீங்குதிற லெண்மர் விரைந்தெய்த—வாங்கிலங்கெண் ()

ணைந்தாறு கொண்டா ரமரர்கண மீரொன்பான்
பிந்தாது முன்னே பெயர்ந்தெய்த—நந்தாமே (கசந)

கோவ லிருளினுறு கூராழி யாற்கண்ட
பூவரு பொய்கைபேய் பூதனெனு—மூவர்களும் (கசச)

(கசந) ஐந்தாறுகொண்டார்=ஏகாசதருத்திரர்.

வையம் புகழு மழிசைப் பதிப்போதந்
துய்யுந் தமிழுரைத்த வுத்தமனுஞ்—செய்யிடத்தில் (கசரு)

வெண்குருகூர் வண்குருகூர் மேவிமறை யாயிரமா [வக்
மண்குளிர்செய் செந்தமிழ்சொல் வண்மையனு—மெண்குல

கோர்ளு ருதித்துக் குருகூரன் ருட்கன்புற்
ருளு மதுரகவி யாழ்வாளும்—வாளுடனே (கசஎ)

பண்டுசிந்த மீதுசென்று பைங்கொண்டல் காட்சிதரக்
கண்டுகொண்ட பூங்கொல்லிக் காவலனு—மண்டர்தொழ ()

வல்லியக்கூத் தாடினன்பா லன்பிற் றமிழ்புனைந்த
வில்லிபுத்தூர்ப் பட்டனெனும் வேதியனு—நல்லதந்தை ()

நாடித் தினந்தொடுத்த நன்பூந் தொடைமாற்குச்
சூடிக் கொடுத்த சுடர்த்தொடியு—நீடுற்ற (கருo)

மன்பதை யீண்டிய மண்டலங் குடிப்போந்த
வன்ப ரடிப்பொடிப்பே ராழ்வானு—மின்பமிகு (கருக)

கையுடை யாழிற் கருங்கொண் டலைவசித்து
மெய்யிடம் பெற்றுற்ற மேலோனுஞ்—செய்யநெடும் ()

புத்தவி காரம் புகுந்துருவங் கைவர்ங்கி
யத்தன் றிருப்பணிக்கே யாக்கினனு—மெய்த்தவத்தா ()

லாய்ந்தளித்த கண்ணிநுண்ணீ ராறு யிரம்புகன்று
வாய்ந்த பிரபந்தம் வாங்கினனு—மேய்ந்துளபன் (கருச)

ஞானவந்தான் செய்யாக்கி நம்பியையென் றேதிலைத்த
வானவந்தா னென்னு மருண்முனியுங்—கோளில்பெரும் ()
பூதூரிற் றோன்றிப் புனைபல் பெயரேற்று
வேதம் பொருள்செய்த வித்தகனு—மாதவைய (கருசு)
வேத முழக்கி விளங்குபிர மாணகத்
தேதின் மதமாக்க ளீடழித்து—வாதின்மால் (கருஎ)
சீர்த்திக்கோர் வித்தாய்த் திகழ்ந்தோ னளவில்பெருங்
கீர்த்திப் பராசரப்பேர்க் கேசரியு—மார்த்தபுகழ் (கருஅ)
மாவலிவா ணற்கருளி வண்புளிக்கு வீடுதவி
மேவரிய நற்சமய மேவுவித்துப்—பூவுலகிற் (கருகூ)
பல்கு தனதூதி பண்ணவனே பன்னவருண்
மல்கு மணவாள மாமுனியுந்—தொல்லுலகிற் (கசா0)
பன்னு குருவின் பரம்பரையிற் சீர்த்தியொடு
பின்ன ருதித்த பெரியோருந்—துன்னியவ
ணீண்டுமெழு பூத்தூரன் கென்றுஞ்சிங காதனத்துப்
பூண்டுக ழோடிலங்கு புண்ணியரும்—வேண்டிவங் (கசா௨)
தன்னை ருடன்கூடி யாரா மகிழ்ச்சியராய்த்
துன்னு விருபானுஞ் சூழ்ந்துதிரு—மின்னுள்வாழ் (கசா௩)
மார்புடையாய் போற்றியிகல் வாளரக்க ரீடழித்த
சீருடையாய் போற்றியென்று சேவிப்ப—வார்தடக்கை ()

வேத்திரங் கொண்டு விரைந்து நெருங்கிவருங்
காத்திரர் தம்மைக் கடிதுசென்று—நீத்து (கசு௫)

நெருக்கொதுக்கிச் சந்நிதியி னேவொவருங் காணத்
திருத்திவருங் காலினது செம்ம—ணிரைத்துவைத்து ()

முன்னடப்பப் பேரி முருடு தடாரிமொந்தை
பன்னுபல வாச்சியங்கள் பம்பிவரத்—துன்னுதவ (கசுஎ)

நாரதர் தும்புரு நான்முக னுவுறை
பாரதி யென்றிவர் யாழ்பயில்—சீரினர் (கசுஅ)

வந்து மருங்கு நரம்பின் வயங்கிய
மந்த சுரங்கள் வழங்கவி—ழைந்திரு (கசுகூ)

பங்கினு மும்பர் பயின்ற வரம்பையர்
சங்கினு மந்த நிறைந்தத—மங்கள (கஎ0)

நின்றெழு மின்ப நிரம்பி வருஞ்சுர
மொன்றிய செங்கை யொளிர்ந்திட—நின்றெதிர் (கஎக)

பாய நடனம் பரிந்தியற்றிக் கொண்டேகத்
தூய முனிவர் தொழுதேத்தத்—தோய்நடநூ (கஎஉ)

லாய்ந்த முறைமைதனி லாட்டுவோர் தம்மோடு
தோய்ந்தவிசை பாடுநர்பின் சூழ்ந்துவர—வாய்ந்தபல ()

வாரியலுங் தோற்கருவி மாக்களெல்லாம் பின்னிற்பத்
தோரிய மாதர் தொடர்ந்தெய்தச்—சேர (கஎச)

விரத்திகொண்ட மாதவரும் வெஃகுமெழின் மேனிப்
பரத்தையர்கண் மங்கலமுன் பாடி—யருத்திசெய்மா ()

னம்பிதெய்வப் பாணிசொல்லி நால்வருணப் பூதனையும்
பம்புசுட ரிந்துவையும் பாடியபின்—றப்பயில்விற் (கஎக)

றுளத் தியல்பு தழுவப் பிறநீங்க
வாளத்தி யோடே யமைவுபெறக்—கேளுற்ற (கஎஎ)

வார மிரண்டும் வரிசையிலே பாடியப்பா
லேரிய வாரத்தி னீற்றினிற்சேர்ந்—தாருங் (கஎஅ)

குழலோ டியாழ்மத் தளமுங் குடங்கொண்
முழவு மியக்க முறையே—வழுவிலா (கஎகூ)

வாமந் திரிகையுட னந்தரம்வே றில்லாமற்
றமந்தக் கூத்திரண்டின் சார்பறிந்து—தோமி (கஅ0)

லகக்கூத் தினைமுக் குணமு மமையத்
தொகுத்தாறு நன்னிலையுந் தோன்ற—வகுத்த (கஅக)

வருத்தனை நான்கை வகைப்பாத மீரெட்
டுருத்திகழ் மெய்க்கிரியை யொன்ற—திருத்தக்கை (கஅஉ)

முப்பது மாறு முறையே விலக்குறுப்பி
னொப்பப் புணர்த்தி யுயர்தேசிக்—கிப்பதங்கண் (கஅங)

மூவெட்டு மூசாத முன்வடுகிற் கீரேழு
மாவிட்ட வண்ணம் வயங்கவே—மேவுற்ற (கஅச)

மெய்சாய் விடைநெரிவு மேற்சுழிவோ டாங்கணைதல்
கைதூக் கசைத்தல் கலைபற்றல்—கைகள் (கஅரு)

விரித்தல் குவித்தலிவை சிங்களத்தின் மேலென்
றுரைத்தவுடல் வர்த்தனையு மோங்க—நிரைத்த (கஅசா)

வவிநய நூல் வல்லா ரகமகிழ வேமிக்
கவிநயத்தோ டேயனைத்துங் காட்டிப்—புவிகளிப்ப (கஅஎ)

மெய்க்குற்ற மெட்டுமிலார் மென்பாட னல்லசுவை
மொய்க்க மிழற்றியே முன்னடப்ப—மைக்கடலைத் (கஅஅ)

தாண்டிச் சிறையிருப்புத் தானறிந்து வந்தன்பு
பூண்டவனு மக்கொடிமுன் போந்தெய்த—வீண்டிக் (கஅகூ)

கிளர்தாய் கொழுங்கானைக் கிட்டிச்செய் யென்ற
வளர்தவந்தா னன்றுவந்தான் வந்தான்—றளிர்மெய்த் ()

திருவார் சிறைபயிலச் செய்த விலங்கை
மருவார்மேற் கண்சிவந்தான் வந்தான்—பொருதே (ககூக)

கதத்திற் கராம்பிடிப்பக் காத்தருணீ யென்ற
மதக்களிற்று முன்வந்தான் வந்தா—னிதத்திற் (ககூஉ)

பொருவாரு மில்லாப் புகழெழின்முன் றேற்று
வருதேவர் மேனிவந்தான் வந்தா—னுருகி (ககூங)

யழுத்தா தரவுடனே யல்லும் பகலும்
வழுத்தார்முன் வாராதான் வந்தான்—விழுத்தகுசீர் (ககூச)

வந்தான்வந் தான்புயமி வர்ந்தா னடியார்ப
வந்தான் கடியவந்தான் வந்தான்காண்—முந்தோர்வன் ()
குன்றெடுத்து வெண்ணெயளை கொண்டுண்ட கோன்வந்தா
னென்றெடுத்துச் சின்ன மினிதியம்ப—நின்றநெடு (கசுசு)
விண்டலத்தைக் கீண்ட விமான நவமணிகொண்
மண்டபத்தை விட்டு மகிழ்ந்தெழுந்து—தொண்டர்தொழத்
தோளுக் கினியான்மேற் றேகையொடுந் தானிவர்ந்து
நீளத் திகழ்சுடர்க ணின்றெறிப்பக்—கீளுற்றிவ் (கசுஅ)
வண்ட நடுங்க வதிர்வெடியெல் லாங்குமுற
மண்டுகுடை பிச்ச மலிவெய்த—வெண்டிசையு (கசுகூ)
மாமகர தோரணங்கள் வண்சுருட்டி யாலவட்டங்
காமர் கொடியின் கணநெருங்கத்—தூமணிகொள் (உ00)
வெள்ளைக் குடைநிழற்ற வெண்சா மரையிருபால்
வள்ளைக் குழைமாதர் வந்திரட்ட—வொள்ளியநீள் (உ0க)
குன்றன்ன பைம்பொன்மணிக் கோபுரவாய் தல்கடந்து
நன்றுநடைப் பந்தர் நடந்தருளி—யொன்றுவிசும் (உ0உ)
போங்கு சிகரத் தொளிர்மணித்தேர் மீதுமலர்
தாங்கு மரசியொடு தானேறிப்—பாங்குபய (உ0ங)
சிங்கா சனத்திற் றிகழ்ந்திருப்ப மைம்மேனி
வண்காரைக் கண்டுவரு மஞ்ஞையென—வெங்கானிற் ()

றங்கிளைசெய் திங்காற் றழுவு சினமொழிப்ப
வெங்கும் பராய்வருமா னீட்டமெனத்—தங்கண்ணிற் ()

காண வினிய களிறனைய செவ்விகண்டு
பேணியெதிர் கொள்ளும் பிடிகளென—மாணெழில்சேர்

சீத முகமாஞ் செழுமதிகண் டெய்துமொரு
கோதில் சகோரக் குழாமென்னச்—சீதையெனு (௨0எ)

மாது நடக்குமொரு மாட்சிநடை கற்கவருஞ்
சாதி யனப்பெடைக ளாமென்ன—வோதநெடும் (௨0அ)

பூதலத்தில் வாழும் புனையிழையா ருந்தேவர்
மாதலத்தில் வாழு மடவாரும்—பாதலத்து (௨0௯)

நாக மடவியரு நல்யாழோர் கூட்டத்துப்
போக மடவியரும் போகாதே—மோகனஞ்செ (௨௧0)

யேனைய நாட்டி னெழிலார்ந்த மங்கையரு
மேனிலையின் முன்றில் வியலிடத்தும்—வானளவு (௨௧௧)

மண்டபத்து மேனிலைசேர் மாடத்துந் தெற்றியினுந்
தண்டமிழின் றென்றல்வரு சாளரத்துங்—கொண்ட (௨௧௨)

வரமியத்தும் வேதி யகத்தும் பலவாப்
பரவு மறுகிடத்தும் பைங்கா—விரிதலத்துந் (௨௧௩)

தெய்வப் பவனிக்குச் செய்தவலங் காரம்போ
லைவுற் றிடைதுவள நண்ணியற—றுவ்வுற்ற (௨௧௪)

பைங்காரும் வேலைப் படுகடலுங் காயாவுங்
கொங்கார் குவளைக் குருமலருஞ்—சிங்காத (உகரு)
நீலப் பொருப்பு நிழன்மணியு மொவ்வாத
கோலத் திருமெய்க் குளிர்வனப்புஞ்—சாலப் (உகசா)
புலர்காலைப் பங்கயமே போன்ற முகமும்
விலகாக் கருணை விழியு—மலர்மாதின் (உகஎ)
கண்ணும் புருவமுநேர் கண்டகணை கோதண்ட
நண்ணுந் திருக்கை நளினமும்—வண்ணமுறும் (உகஅ)
புன்னகையும் பூணும் புரிநூலுந் தாமரையை
நன்னகைசெய் சேவடியு நாடியே—யுன்னிப் (உகசு)
படையாத காமம் படையா வெதிர்நின்
றுடையா நிறையு முடையாக்—கடையார்ந்த (உஉ.0)
சங்குங் கலையுஞ் சரியத் தமதுள்ளம்
பொங்குகின்ற காமம் பொசிந்துவரத்—தங்கடங்கண் ()
மெய்சோர்ந் தணிகச்சு வீற முலைகள்விம்மக்
கைசோர்ந்து கையறவு காழ்ப்பேற—மைசோர்ந்து (உஉஉ)
கண்ணுஞ் சுழலக் கருங்கோதை கட்டவிழ
வெண்ணுகின்ற நெஞ்ச மிகந்தழிய—நண்ணியின்ப ()
மார்ந்துபிரிந் தால்வருமெய்ப் பாடன்றித் தங்கண்ணி
னேர்ந்துழி யன்ன நிலைத்தலுமே—நேர்ந்தவற்று (உஉச)

ளாதிமுத லில்லாமே யாறு வதின்மூன்று
வோதிய மெய்ப்பா டொருங்கெய்திச்—சீதச் (உஉரு)

செழுந்தரள மாலைமுலைச் சீதையொரு பாலில்
விழைந்துறைய வீதிவரு வீர்நூ—மழிந்தவொரு (உஉசா)

மைந்தனைமுன் னேவி மடவார் மனச்செருக்கைச்
சிந்த விழைத்திடெனச் செப்பிவிட்டீர்—வந்தவனு (உஉஎ)

மையோ கொடும்பாவி யாவி தரிக்கவொட்டான்
கையோ வொழியான் கடிமலரின்—வையேவை (உஉஅ)

வாரியிறைத் தேகா மறுகில் வரப்பொரு
ஞரியனைக் கண்டா னமன்போல—வீரியமாப் (உஉகூ)

பொல்லாச் செயல்புரிதல் போதாதென் றேநீரு
மொல்லா விழைப்பமது குற்றிவண்வாழ்—நல்லாளை ()

யிவ்வண்ணஞ் செய்ய வியைந்தீ ரினியாங்க
ளுய்வண்ண மெவ்வண்ண மோதுவீர்—செவ்வண்ண ()

மங்கை யொருத்தியுளம் வாடச் சிறைவைத்தா
னங்கவனை முற்ற வழித்திட்டீ—ரிங்கணுள (உநஉ)

மாத ருயிரை வருத்துவீர் நீர்தாமோ
நீதி நடுவு நிலையுடையீ—ராதியிலே (உநந)

மந்தரைமெய்க் கூன்மேல் வரிசிலையால் வில்லுண்டை
யுந்தி யவண்மேனிக் கூறுகண்டீர்—வந்தவொரு (உநச)

(உஉரு) மெய்ப்பாடு—கலங்கிமொழிதல்.

பெண்ணென் றிரங்காது பேறுற்ற தாடகையைப் [வோர்
புண்ணுென்ற நல்லாகம் போழ்ந்தெறிந்தீர் — துண்ணென
சூர்த்தவிழிச் சூர்ப்பநகை தோய்குழன்மென் மூக்குமுதற்
கூர்த்தவாள் கொண்டொருங்கு கொய்வித்தீர்-பார்த்தவுட
னின்றெம்மை யிக்கோலஞ் செய்வீர்நும் வீரமெலா
மென்று மடவா ரிடங்காண்பீர்—நன்றுமலர் (உ௩எ)
மானை யெரியிலிட்டீர் மற்றவண்மீண் டெய்தியபி
ன்னை கருப்பிணியென் றுன்னுமற்—றீதுபுரி (உ௩அ)
காட்டிற் புகச்செய்தீர் காட்டிருந்து பின்னுநுந்
நாட்டில்வரத் தீயில்விழ நாட்டினீர்—வேட்டுச் (உ௩௯)
சிறிதுமெம் பாலிரக்கஞ் செய்யீர்நுந் நெஞ்ச
மறியிற் கருங்கல்லே யாகும்—புறவிலண்டர் (உ௪0)
நாரியனைத்தோய்ந்து கண்ண னென்னித் தியபிரம
சாரியெனும் பேர்கொண்ட தன்மையயற்—காரிகையா ()
ரின்பெதுவு நாடாத வேகதா ராவிரத
னென்பதுப சாரவழக் கேயாகு—முன்சனகன் (உ௪௧)
சூழ்வித்த வேள்விதனிற் றேய்வின்முறித் தோர்மானை
வாழ்வித்தீ ரென்பர் வறிதாகப்—போழ்வுற்ற (உ௪௩)
வச்சிலையோ வன்மை யனங்க னெமையொறுக்குங்
கைச்சிலையை நீர்முறித்தாற் காணலா—மெச்சுதிற (உ௪௪)

லஞ்சிய வெங்கட் கருள்செய்யீர் வீரைப்போற்
செஞ்சிலை யொன்றேந்தித் தெருவருவீர்—பஞ்சியடி ()

மாதர்பகை கொள்ளாதீர் மந்தரையாற் பட்டவெலாம்
போது மினிவாளா போகுவீ—ரோதமின்றித் (உசசு)

தண்டகத்துச் சேர்ந்தாளைத் தள்ளிவிட்ட தோர்ந்துருமைக்
கொண்ட விருப்பாற் குறுகியதுங்—கண்டகவே (உசஎ)

டீது பொறுமலன்றோ சேர்ந்தவெமைக் காவாமே
காதுதல்செய் தால்யார் களைகணோ—வோதொருவன் ()

றீதுசெய்தால் வேந்தனிடஞ் செப்புவா ராங்கவனுங்
கோதுசெய்தால் வேறு குறிப்பதுண்டோ—ஈது (உசகூ)

புரிபுலியூர்க் கஞ்சி நரியூர் புகுத
நரியூர் புலியூரா நண்ணிற்—பரிவதென்கொல் (உருo)

சாலவுரைத் தென்னுந் தனைய ளொருகால
காலனையுங் காய்ந்த கடுப்பினான்—மேலிங் (உருக)

கெமையடர்த்தா லென்செய்து மிச்செய விற்ப
னமையடைந்த வெங்களைக்க ணேக்கி—ரமைவுறுமைம் ()

மேனியீர் வார்சிலைக்கை மேதகையீர் நீரேகி
தானியீ ரன்பு தணவாதீர்—மோனநீத் (உருங)

தோதுவீ ரெங்களுக்கோ ருத்தரஞ்சொல் வீரொன்று
மாதரார் சூழு மறுகிடத்தோர்—பேதை (உருச)

## பேதை

மிகுந்தகடுங் காமத்தீ வெம்பசிக்கூ ணின்பம்
பகிர்ந்தளிக்க வங்குரித்த பைங்கூழ்—சகந்தந்த (உருரு)

வன்னை வளர்ப்பச்சிற் றன்னைபே ரிட்டமையாச்
சின்னஞ் சிறிய செழுங்கிள்ளை—முன்னெய்த (உருசா)

வாழி சயந்தவடி வக்காக்கை பால்வளரா
தாழின் வளர்ச்சிபெற வோங்குகுயில்—வாழி (உருஎ)

திருந்தியே ரத்தரசன் சேர்த்தளிப்ப நாடா
தொருங்குசுவை மல்கா தொளிர்தேன்—மருங்குதா ()

வின்கனிதேர்ந் தீசற் கெனவொதுக்கு நற்சவரி
நன்கனிவாய் நண்ணுத நற்பிஞ்சு—தன்கற்பிற் (உருகூ)

கோடா வநசூயை கோதைமுடி சூட்டவுரு
வாடா மணநாறு மௌவன்முகை—நீடாழிச் (உசா0)

சேதுவிடப் போதுவாற் கென்று செழும்பொதியில்
போத வுயிர்க்குமிளம் பூந்தென்ற—லோதமிசைத் (உசாக)

தங்கு மொருவன் றடமா மலர்க்கரத்துச்
சங்க முயிர்த்த தனிமுத்த—மங்கிலங்கு (உசாஉ)

சேக்கையின்வாய் நஞ்சோடு சேராது தான்றோன்றி
மாக்கவினைக் கொள்ளவரு மாணிக்கம்—தேக்குவரி (உசாரு)

மத்திக்குங் காலே வருமமுதை யேந்திவைக்கப்
புத்தப் புதிதுபுனை பொற்கும்பம்—பத்தியின்மிக் (உசாச)

காரற் புதன்கை யசலத் திருந்திலங்கை
சாரப் புகுதாத சஞ்சீவி—போரகத்து (௨௬௫)

வாட்டிறல்சேர் வல்லரக்கன் மைந்த னிகும்பலைபோற்
கூட்டி முடியாக் குழலினா—ளூட்டியசீ (௨௬௬)

ரங்கமைந்துந் தம்மெய்க் கமைவித்தா ருள்ளம்போல்
வெங்கண்மை யில்லா விழியினா—டங்குபுகழ்ப் (௨௬௭)

பின்னோர் பரத விலக்குமணர் பேணித்தாம்
பன்னாளுஞ் செய்கின்ற பத்திமைபோன்—முன்னான ()

வெல்லாப் பொருளும்வெளி யெய்தா சிலகரக்கும்
வல்லார் கவிபோன் மணிநகையாள்—வல்லோ (௨௬௯)

னெழுது மிராமா யணச்செஞ் சுவைபோல்
வழுவி லமுதொழுகு வாயா—டொழுதகைய (௨௭0)

மீன வுருவின் விளங்குமிரு கண்போல
வான வடையாள மாங்கெய்திப்—பேனநெடு (௨௭௧)

நீர்மலியும் வேலை நிலைகலக்குந் தூணோந்து
கூர்மவுருப் புள்ளடங்கு கொள்கைபோற்—பார்வகிர்வான்

பன்றிக் குருளையுருப் பற்றுவதன் முன்னமே
தன்றிருக்கோ டுள்ளிருக்குந் தன்மைபோல்—வென்றிமிகு

தானவன் பண்டு தழற்சினத்தா லெற்றுமுன
மானநர சிங்கந்தூண் வைகுதல்போ—லானசிறு (௨௭௪)

வாமனனென் றெய்துங்கால் வானளவு மேனியந்தக்
காம ருருவிற் கரந்ததுபோற்—சேமமுற (உஎரு)

முந்துதவு மூரிவல்வின் மொய்ம்போ டுதவுதற்கு
வந்தமழு வாளி மனமேபோற்—சிந்தையெலாம் (உஎசு)

வெம்பிலங்கை யொன்னாரை வீட்டவுன்ற முன்னமே
யம்புவெரின் புட்டி லடங்குதல்போல்—வெம்புகஞ்ச ()

னூற ருயிருண்ண வோர்நந்த கோன்மனையிற்
றூனே மறைந்துவளர் தன்மையைப்போ—லானுத(உஎஅ)

கற்கி வடிவங் கருதி யெடுப்பதற்கு
நிற்கு மரியநிலை யேபோல்—விற்பனஞ்சேர் (உஎகூ)

நன்மறையோர் வன்மொழியா னம்பியொரு கான்மைந்தன்
றன்வலிமை புண்மறைந்த தன்மைபோன்—முன்னமொரு

மைந்நாக மென்னு மலைவா சவற்கஞ்சித்
தன்னுக நீர்மறைந்து தங்குதல்போ—லுன்னுமு (உஅக)

னின்பளிக்கு நற்பே ரிரண்டெழுத்தே போன்மார்பின்
முன்புடைத்தல் சாலா முலையினு—ணன்பொருவில் ()

வான்மீகி முன்னுரைத்த மாநிடா தக்கவியைப்
போன்மே வமிழ்தம் பொசிதந்து—நான்மேய (உஅரு)

பண்ணமைந்த யாழும் பயிலுங் குயிலுமிவை [ணியே
துண்ணென்று வெள்கவொர்சொற் சொல்லுவா—ளெண்

தன்னிழலைத் தானழைப்பத் தன்னோடது பேசாமை
யென்னிமித்த மோவென் றிரங்குவாண்—மன்னுசிறு ()

கச்சு நெகிழ்த்துத்தன் கைப்பாவை பாலுண்ண
நச்சுமுலை யில்லையென நாடுவா—ளச்சமின்றி (௨௮௫)

யென்னேநின் மார்பி லிருக்கின் றவையெனக்கிங்
கன்னே திருந்த வமைத்தியென் றன்—பொன்னுன (௨௮௭)

பாவை கலுழாமற் பாலூட்ட வென்றன்னை
கோவை பிடித்தரற்றிக் கூறுவாள்—பூவையுட (௨௮௮)

னீன்றதாய் வாளா விருந்த கொடுமைசொல்லிக்
கான்றுகண்ணீர் வாரக் கலுழுவா—ளூன்று (௨௮௯)

மயலார் சிறுமியர்பல் லாயிரவர் மைம்மி
னியலா ரொருங்குறச்சேர்ந் தெய்திச்—செயலாருஞ் ()

சிற்றி லிழைத்துச் சிறுமணலின் சோறட்டு
மற்றுமரப் பாவை மணனயர்ந்து—முற்றிநெடு (௨௯௧)

மாட மலியு மறுகினிடை யிங்ஙன்விளை
யாடல் புரியு மமைதியிலே—நீடம்பான் (௨௯௨)

முன்னமர மேழு முருக்கினு னன்பினர்பாற்
றென்னம ரஞ்சச் செயும்வீர—னுன்னிற் (௨௯௩)

---

(௨௯௩) இதுமுதல் சில மரப்பெயர்கள் முதலியன ஒலித்தலைக் குறிப்பினுலுணர்க.

கரும்பனையா னெஞ்சிற் கருதார்க்கு வேம்ப
னிரும்பனையார் தம்பா லிராதான்—றிருந்தியவிப் (௨௯௪)
பூவரச னத்திக்குப் போந்தருளிச் செய்திட்டான்
காவரசன் போற்றுங் கருவேலான்—மேவலர்த (௨௯௫)
நொச்சி யழித்தா னுவறும்பை வேய்ந்தொன்னார்
வச்சகளத் திற்சூடும் வாகையா—னச்சியருள் (௨௯௬)
வேட்டார்வத் தேன்றுறிக்க வெவ்வினையி லேயென்றுங்
காட்டா யணக்குங் கருணையா—ணட்டியசீ (௨௯௭)
ராலத் தமர்ந்தபிரா னன்பரன்றி யிச்சியான்
காலக் கவியின் கதலிகையான்—சாலவும்வைத் (௨௯௮)
தூது வளையா னெருங்குசூழ் கள்ளியங்கு
தாது விளைதுளவத் தண்டாரான்—கோதிலாக் (௨௯௯)
காயாம்பூ வண்ணன் கணந்தேக்கு நற்கவியான்
மாயாத வீரை வரம்பிட்டான்—வீயாச்சீர் (௩00)
வெப்புளியஞ் சேர்தானை வேந்தனக லாமலகத்
தொப்பின்மா ரீச னுயிருண்டான்—செப்பமிகு (௩0௧)
மிஞ்சியா னற்கருணை யீசன்மிகு வள்ளியா
னஞ்சி லவரைக்கா யாற்றலான்—விஞ்சுமிகைக் (௩0௨)
கஞ்சாங்கோ ரைவர்தமைக் காய்பகையை வேரறுத்தான்
மஞ்சாருந் தில்லை வளாகமால்—விஞ்சார்வ (௩0௩)

மல்குற்ற நற்றேர் மறுகில் வரக்கண்டாங்
கல்குற் றிருத்தே ரனைமார்பாற்—புல்குற்றுங் (௩0௪)

குய்வழியே யன்று ருவந்திறைஞ்சத் தானுமங்ஙன்
றெய்வ வுருவந் தெரிசித்துச்—செய்யிரதத் (௩0௫)

தாமொன்றுட் காரா வமுதென்ன வாய்ச்சுவைக்க
வோரன்ன மன்று ளறுவகையளா—யார்தரயான் (௩0௬)

மற்றேதும் வேண்டேனம் மாவமிழ்தந் தாவென்னச்
சிற்றே ரிடையாள் சிறுநகைசெய்—துற்றோதக் (௩0௭)

கேட்டிலையோ முன்னங் கிளரு மயோத்திநகர்
வாட்டடங்கை மன்னன் மகிழ்ந்துகலைக்—கோட்டனொடு ()

புத்திரகா மேட்டி புரியமனைக் கோசலைமா
னத்தகைய வுந்தி யலையிற்போந்—தெத்திசையுந் (௩0௯)

தன்னைக் கருதார் தமக்கயலா யுன்னுவா
ருன்னச் சுவையுளத்தி லூறியே—பன்னுதற்கு (௩௧0)

நாவிற் கினிதாகி நாவலர்க டாம்பாடும்
பாவிற் கினிதாய்ப் பயிலமிழ்த—மேவியே (௩௧௧)

யொல்லா வவுண ருளமயங்கச் செய்வதுகா
ணல்லார் மயக்க மறுப்பதுகாண்—மல்கார்வ (௩௧௨)

மோகினி மாதின் முனம்வருவ தொள்ளெழின்மெய்த்
தோகை திருவோடு தோன்றுவது—மோகமுற்றுக் (௩௧௩)

கள்ளவிட நாகங் கருதமேல் வைகுவது
புள்ளரசு கொள்ளப் புறப்படுவ—தெள்ளுமியற் (௩௧௪)

றேமுறு வேடன் றொடர்ந்துவாய்க் கொள்ளுமுன
மாமுனி யாக்கி மலிவதுகாண்—காமருசீர் (௩௧௫)

மங்கை யுயர்கற்பின் வைதேகி தன்னுபயக்
கொங்கைக் குடத்திருந்து கொந்தளிப்ப—தங்கண்மிகு ()

மன்பிற் சவரி யருங்கனிக ளூட்டுதலா
லின்பச் சுவையதிக மெய்வதுகாண்—முன்பிதுகாட் ()

டீரேழ் வருட மியைந்து புறஞ்சென்ற
வாரோர் முலைக்கன்றி வாய்க்குமோ—நேரோநீ (௩௧௮)

பார்த்து மகிழ்தியெனப் பைந்தொடியாண் மேகலைதொட்
டீர்த்து விழிநீ ரிறைத்திடுமுன்—சீர்த்திநற்றே (௩௧௯)

ரப்பா லகல வநங்கவேள் வெள்கியுளம்
வெப்பா லகல வெதுப்பொழித்துக்—கைப்பா (௩௨௦)

விதஞ்சொல்லி நற்றுய ரோந்தியே பல்லற்
புதஞ்சொல்லி மாடம் புகுந்தார்—பெதும்பை (௩௨௧)

## பெதும்பை

யெனுமொருபெண் மாரற் கிளவரசே யாகப்
புனைவதனுக் கொத்த புகழா—டினமு (௩௨௨)

மருமந்த மானவே ளாய்கல்வி கற்க
வருமந்த மான மடமான்—கருமைக் (௩௨௩)

கடன்முகட்டி ஞாளக் கதிர்வந் துதித்தான்
மடல்விரியுஞ் செந்தா மரைப்போ—திடமையின் ()

கூட்டமதைக் காணவுளங் கொண்டமயி றேமாவின்
கோட்டிவர்ந்து கூவக் குறித்தகுயில்—வேட்டெழுந்த ()

வும்ப ரசுர ருணப்பார்க்குந் தெள்ளமுது
பம்பு புளிஞர்சுற்றிப் பார்க்குந்தே—னம்புவியிற் (௩௨௬)

கொற்ற மதியக் குடையான் சுருதிவகை
கற்றுரைப்ப நாளுங் கருதுகின்ளோ—செற்றஞ்செய் ()

காமநெருப் பாலழியுங் காமுகப்பைங் கூழ்வளரச்
சூன்முதிர்ந்து பெய்யவந்து சூழ்மேகஞ்—சேய்மைப் ()

பனிமதியைக் காணுத பைங்கழுநீ ரந்தத்
தனிமதியைக் காணுச் சகோர—னியருள்செவ் (௩௨௯)

வணணமலாத தாடகனபு வாயநததிரு மஙகைமனனன்
கண்ணும்வினை யொத்த கருங்குழலா—ளண்ணி (௩௩0)

யரம்பும் படிறு மமையாத சூதும்
விரும்பிவந்து பார்க்கும் விழியாள்—வரம்பி (௩௩௧)

விளையாரை வாட்டுவதற் கேய்ந்தகடுங் காம
முளைவாய்ந்த வென்னு முலையா—ளுளையவரன் (௩௩௨)

ஞாட்பட்ட காமனது நன்னூல் விருத்தியுரை
கேட்புற்றுங் கேளாதார் போன்றிருப்பாள்—வாய்ப்பி ()

ஞறுமலரும் பொன்னணியு நாடி யணியச்
சிறிது விரும்புஞ் செயலாள்—பெறுகற்பின் (கூகூச)

மாதர் தழுவு மடநாண் பயிர்ப்பிணைய
மீது சிறிதியங்கு மெய்யிளு—ளோதயலார் (கூகூரு)

பெண்களுடன் போதப் பிடிபோன் மடவனம்போன்
மண்களிக்க வின்றோர் மனங்களிக்க—விண்களிக்க (கூகூசா)

வெய்திநிய மப்புறத்தி னேறுங் கடலனபூம்
பொய்கை புகுந்து புனலாடித்—துய்ய (கூகூஎ)

வழகார் துகிலையுடுத் தாய்மலர்கள் சூடிப்
புழுகார் பரிமளங்கள் பூசி—யொழுகொளியின் (கூகூஅ)

பத்திசெயும் பல்பூண் பரித்தெழின்மெய்ச் சோதிவிடச்
சித்திர நல்வே திகையேறி—யொத்தொளிர (கூகூகூ)

வுற்ற மணிக்கழங்கங் கோரேழ் புரிந்தெடுத்துச்
சுற்றி யிருளேயர்க டொக்கிருப்ப—நற்றிறத்தி (கூச0)

ஞென்றென் றெடுத்திருவ ரோங்கு மனுவிரண்டாய்
நின்றவெழுத் தோருருவா நேர்பாடிப்—பின்றை (கூசக)

யிரண்டென்று மேனு ளிருபதத்தாற் றிண்கல்
பரிந்த மங்கை யானபுகழ் பாடித்—தெருண்டப்பான் ()

மூன்றென்று மூன்றிடத்து மூவர்வடி வாய்ப்பதங்கண்
மூன்று மளிக்கு முறைபாடி—யான்றவன்பி (கூசகூ)

னான்கென் றெடுத்துமுத னால்வர் மணச்சிறப்பின்
வான்குலவு மேற்ற மகிழ்ந்தோதி—யாங்கடுத்த (௧௪௪)

வைந்தென்று தாய்மொழியா லாரணியப் பஞ்சவடி
வந்தவ னாற்ற வகைபாடி—முந்துமன்பி (௧௪௫)

னாறென்றெங் கோமாட்டி தன்னை யரக்கன்வௌவ
வாறெங்கு நாடு மதுபாடிப்—பேறொன்ற (௧௪௬)

வேழென் றெடுத்தண்டத் தேழா யினநடுங்க
வேழுமராந் தீர்த்த விசைபாடி—யேழுலகோர் (௧௪௭)

காணுத லாய கருணை யியல்பாடி
வாணுத லாடி மகிழுங்கா—னீணிலத்தி (௧௪௮)

னாடுசிறப்பு நணுகுமொரு தில்லை நகர்
கூடுதிருச் சித்திர கூடத்தா—னீடுநறும் (௧௪௯)

பூவிரியுஞ்சோலை புடையோங் கிரு கோட்டுக்
காவிரியிற் றென்பாலோர் கங்கையென—மேவருநீர்ப் ()

புற்றரவு தந்தமணி போந்தபுல வற்குதவக்
கற்றவிண்ணவன் கண்ட கடிவரல்யாற்—றுற்றுயர்ந்து ()

பொங்குபுன லெஞ்ஞான்றும் போந்து குடக்கொழுகு
மங்கண்வட பாற்கோணை யாற்றினான்—றங்குசெம்பொ ()

னாட்டினார் நாட்டின்னா நாடாமே நன்னாடா
நாட்டின னற்சோழ நாட்டினா—னாட்டுபுக (௧௫௧)

ழும்புவியோர் போற்று மகன்சோணாட் டோங்கிவள
ரும்பள நாடனவ் வோர்நாட்டுட்—பைம்பொழில்சூழ் ()

சாளுவ நம்பி சதுர்வேதி மங்கலத்தி
னாளு மவாசி நயந்தோங்கி—நீளுயர்ந்த (௩௫௫)

வெல்லையிலா மாந்த ரியைந்தாங் கறம்பலசெய்
தில்லை வளாகச் செழும்பதியா—னெல்லையிலா (௩௫௬)

மாலையா னீக்கவருண் மாலையான் சேரலன்சொன்
மாலையான் றண்டுளவ மாலையான்—கோலங் (௩௫௭)

கரியானெங் கெங்குங் கரியான் றிருந
கரியான் மருமால் கரியான்—பிரிவார்ப் (௩௫௮)

பரியான் சவரி பரிந்து புரிச
பரியான் குரக்குப் பரியான்—பெருகியே (௩௫௯)

யென்றுங் கடல்வேலை யின்னொலிபோ லோவாது
முன்றில் கறங்கு முரசினா—னென்றுமறந் (௩௬௦)

தோன்றிய வாணைக்குச் சுக்கிரீவ னென்னும்பே
ரான்றவனும் வாய்புதைக்கு மாணையா—னூன்றுநெறி ()

செற்ற விலங்கைச் செறுநர்ச் செறுத்துயர்த்த
கொற்ற வ[illegible]மக் கொடியினான்—றுற்றவரஞ் (௩௬௨)

சூலிபாற் கொண்டான்செய் சூழ்வறுப்ப வேலையணை
கோலினான் கோடாச்செங் கோலினான்—மாலைமணிக் ()

கச்சு வதியுங் கமலை கனதனத்தி
னச்சு வதியு மகன்மார்பன்—மெச்சித் (௩௬௪)

தரணி புகழத் தகுவரைக்கொன் றூன்றோர்
பரணிநனி பாடப் பயின்றோன்—றிரளுநெடுங் (௩௬௫)

கார்த்திகைப்பிக் கும்மேனிக் கண்ண னுரோகணிசே
யார்த்த ம்ருகசீ ரிடமறுத்தான்—சீர்த்தித் (௩௬௬)

திருவா திரைக்கடலிற் சென்றுறங்கு வோமென்
றொருவாதாங் குற்ற வொருவன்—மருவுபுணர் (௩௬௭)

பூசத் திருநாளிற் போதந்தான் பூஞ்சந்தம்
பூசத் திருமல்கு பூண்மார்ப—னேசஞ்செ (௩௬௮)

யாயிலியத் தந்தையிலி யாருமிலி யாவுமுளன்
மேய பரிமகஞ்செய் மேதக்கோன்—றாயநறுங் (௩௬௯)

கற்பூர நாறும்பைங் கார்மேனிக் கொண்டன்மிகு
பொற்பூர நின்ற புகழ்வைப்பு—விற்பூட்டி (௩௭0)

யத்திரங்கள் வீசி யமர்க்களத்தி லனறரக்க
னுத்தரமொன் றோதா தொறுத்திட்டான்—மெத்துசிலை()

சேரத்த நம்பிவீ சித்திரையார் பாற்கடலி
னூரத் துயிலு மருட்சோதி—வேரித்தண் (௩௭௨)

---

(௩௬௪) இது முதல் உ௭-நக்ஷத்திரங்களின் பெயர்கள் ஒலித்தலைக் குறிப்பினாலுணர்க.

பூத்தவிசா கப்பொருந்து பூவை புணர்கேள்வன்
வாய்த்த விசாகனுக்கோர் மாதுலனீர்—கோத்தநில (௩௭௩)

மேத்து மனுடவடி வேந்திறன் கேட்டையுறக்
கோத்த நிருதர்களைக் கொன்றழித்தான்—மாத்தடத்தின்

மூலமே யென்றழைக்கும்மா முன்வந்தா னெவ்வுயிர்க்கு
மூலமே யான முதற்கடவுள்—ஞானூநற்பொற் (௩௭௫)

பூரா டகத்தானை போர்த்தலைத்தான் றாணிடைவந்
தோரா டகத்தா னுயிர்கவர்ந்தா—னீராடி (௩௭௬)

யாண்டிருத்தி ராடவந்தி ராயிழையீ ரொன்றவர்த
மாண்ட கலைகவர்ந்த மாட்சியான்—வேண்டிப் (௩௭௭)

பொருவே ணயவாப் புலத்தா ருளத்தான்
திருவோண நாளுடைய செம்ம—லொருவாது (௩௭௮)

கோவிட்ட மாயெதிர்ந்த நீள்பரசு ராமனஞ்சிப்
பேரவிட்ட கோலான் பெருமறையோர்—சீர்சா (௩௭௯)

விதையங் குளிர விடுமாசி யோடட்
சதையங்கை யேந்துஞ் சதுரன்—பதையார் (௩௮௦)

விருப்பூரட் டாதியிலவ் விடணனுக் கீந்தான்
சுருப்புத் திரட்டாதிற் றேய்தா—ருரத்தான் (௩௮௧)

செயிரோ வதிசயந்தன் றீமைசெயப் பைம்பூம்
பயிரோ வுதவு பரம—னியல்செறிதேர் (௩௮௨)

மாமறுகிற் போத மணிக்கழங்கை விட்டெழுந்து
காமரு தாயர் கணஞ்சூழத்—தேமருவு　　(ங அங)

சேவடியைச் சென்றெதிரோ சேவித் தனள்காயாம்
பூவடிவி ளேக்கம் பொருத்தினண்—மூவர்　　(ங அச)

வடிவன் கரத்தில் வயங்குவதென் னென்ன
முடிவி லரக்கர் முடியக்—கடியும்　　(ங அரு)

பொருளென்றுட் கன்னுய் புகுந்தெனக்கு வாங்கி
யருளென்னத் தாய்நகைசெய் தம்ம—தெருளுநிலாய்　　()

வில்லம் பிவையிறைவன் மேனு ளிகந்துவிடி
னல்லம் புவிநிலையி னுடுமோ—தொல்லைநெறி　　(ங அஎ)

வேத மொருநான்கும் வேதா கமப்பொருளும்
பூதலத்தி லென்றும் பொருந்துமோ—மாதரசென்(ங அஅ)

றோதுழித் தாதி யொருபூந் தொடையலொடு
போதர வாங்கிப் புனிதனுக்கே—யாதரவாய்　　(ங அக)

மாலை யிடுவனென மற்றன்னை நம்மகட்குக்
காலைவரு மோகங் கலந்ததென—ஞாலமெலாந்　　(ங கூ0)

தந்த வொருத்தியிடுந் தண்பூந் தொடையலன்றி
யிந்த மலர்மாலை யேற்குமோ—சந்தக்　　(ங கூக)

கொடியே மரகதமே கோமளமே யென்ன
வடிவே னெடுங்கண்ணுண் மையல்—படையாப்　　(ங கூ௨)

